பிரம்ம வம்ஸ பிராமணீய

# யஜுர் வேத கோஷம்



ஸ்ரீ விராட் விஸ்வகர்ம பர ப்ரம்மா

T.M.S. சுரேஷ் சர்மா

ஓம் ஸ்ரீவிராட் விஸ்வப்ரம்மனே நம:

"யஸ்த்விந்ரியாணி மனஸா நியம்யாரபதேர்ஜுனெ
கர்மேந்ரியை: கர்மயோகமஸக்த: ஸவிசிஷ்யதே"

இந்திரியங்களை மனதால் அடக்கிப் பற்றற்று கர்மேந்திரியங்களைக் கொண்டு கர்மயோகம் செய்பவன் மேலோன் ஆகிறான்.

"யத்யதாசாதி ச்ரேஷ்டஸ்ததத்ததேவேதரோ ஜன: |
ஸ யத்ப்ரமாணம் குருதே லோகஸ்தததனுவர்ததே ||"

மேலோன் எதை செய்கிறானோ அதையே மற்ற மனிதர் பின்பற்றுகின்றனர். அவன் எதை ப்ரமாணமாக்குகிறானோ அதையே உலகம் அனுசரிக்கிறது. என்ற கீதையின் கூற்றுக்கிணங்க T.M.S.சுரேஷ்சர்மா அவர்களின் சீரிய பணி அமைந்துள்ளது. இவர் "ப்ரம்ம வம்ஸ ப்ராஹ்மணிய யஜுர் வேத கோஷம்" என்ற இந்நூலில் விராட் விஸ்வ பரப்பிரம்மம் ஸ்ரீவிஸ்வப்ராஹ்மா பற்றி வேதங்களில் கூறப்பட்டுள்ளவற்றைத் தொகுத்து வழங்கியுள்ளார். விஞ்ஞானமானது விண்ணைமுட்டும் அளவிற்கு வளர்ந்திருந்த போதிலும் மெய்ஞானம் ஒன்றே நம்மக்களை உய்விக்கும் என்பதே உண்மை. நமது சமுதாயமக்களுக்கு அனைத்து வைதீக நிகழ்ச்சிகளிலும் பயன் படும் வகையில் அமைக்கப்பட்டுள்ள இந்நூலை எமது நெய்வேலி ஸ்ரீவிஸ்வகர்ம ஃபவுண்டேஷன் வாயிலாக வெளியிடுவதை பெரும் பேராகக் கருதுகிறேன்.

வேதாந்த சொரூப பரப்ரம்மம் அன்னை ஸ்ரீகாயத்ரி உடனாகிய விஸ்வகர்மாவின் அருளால் 10.10.10 அன்று அகில பாரத விஸ்வகர்ம ஜகத்குரு அருந்தவ ஞானத்தந்தை ஸ்ரீசிவசண்முக ஞானாச்சாரிய குருமகாசன்னிதானம் அவர்களின் கனகாபிஷேக விழாவின் போது நமது சமுதாய மக்கள் பயனுறும் வண்ணம் இந்நூலை வெளிடுவதில் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

எடுத்தகாரியம் யாவினும் வெற்றி ; எங்கு நோக்கினும் வெற்றி மற்றாங்கே விடுத்த வாய்மொழிக் கெங்கெனும் வெற்றி ; எண்ணும் நல்லெண்ணங்கள் யாவினும் வெற்றி ; எங்கும் வெற்றி எதனினும் வெற்றி ; என்றும் எப்பொழுதும் அருளுவாள் லோகமாதா ஸ்ரீகாயத்ரி!!!



பிரம்மஸ்ரீ. குமார் பழனிசாமி,
நிறுவனர்,
ஸ்ரீவிஸ்வகர்ம ஃபவுண்டேஷன்,
A – 15, கட்டில் தெரு,
நெய்வேலி – 607 801.
Email : admin@sriviswakarma.org

உ

ஞானாந்த மயம் தேவம் பஞ்ச க்ருத்ய பராயணம்
சர்வ வ்யாமின மீசானம் ஸ்ரீ விச்வகர்மாண மாஸ்ரேய!!



அகில பாரதிய விஸ்வபிராமண பீடாதிபதி
**ஜெகத்குரு ஸ்ரீஆதி சிவலிங்காச்சார்ய குரு ஸ்வாமிகள்**
64-வது பீடாதிபதி ; சீனத்தல் மடம் ; திருவண்ணாமலை.
38-வது மடாதிபதி : **ஸ்ரீமத் பரசமய கோளரிநாத ஆதீனம்**
திருநெல்வேலி.

ஸ்ரீமன் மஹாதிரிகுல பர்வதகிரி திருமூலாரண்ய திவ்யக்ஷேத்ர கண்ணுவ மகரிஷி ஆஸ்ரம மிருகண்ட நதி தீர கோப்ராணதயா நேத்ர விபூதி : ருத்ராக்ஷமாலிகாபரண : மகர குண்டலாங்கருத : பூஷண ஹிமஸ்ஷே தேவபிராமண மகோத்காரக மனு, மய, துவஷ்ட, சில்பி, தைவக்ஞாதி சமஸ்த விஸ்வபிரம்ம பக்த ஜன காரண மகத்வ

**ஜெகத்குரு ஸ்ரீ சிவஷண்முக ஞானார்சார்ய ஸ்வாமிகள்**
**சிவஸ்ரீ சிவராஜ் ஸ்வாமிகள்**

**10-10-10 அன்று ஜெகத்குருவிற்கு நடைபெற்ற கனகாபிஷேகத்தில் இந்நூல் சமூக மக்களுக்கு அர்பணிக்கப்பட்டது.**

- சுபம் -

[illegible]







# பொருளடக்கம்

# 1. முகவுரை



ஸமஸ்த தேவபுரோஹிதர்களுக்கும், சமூக மக்களுக்கும் என்னுடை அநேக கோடி நமஸ்காரங்கள். வேதத்தில் வைதீக கர்ம அநுஷ்டானங்களை பற்றி மிக அதிகமாக கூறும் வேதமாகிய யஜுர் வேதத்திலும் இத உபவேதமாகிய ஶில்பத்திலும் வேதாகங்கமாகிய நிருக்கத்திலும் மூல பரம்பொருளைப் பற்றிக் கூறும் போது பரம் பொருளின் மூல உற்பவ ஸ்வயம்புவமாகச் சொல்லப்படுகிறது. இந்த ஸ்வயம்புவப்ரஹ்மத்தை ப பெயர்களிலும் பல செயல்களிலும் பெருமிதமாக கூறும் போது "விஸ்வகர்ம என்றே வேதம் கூறுகிறது.

"ஸோ அபித்யாய ஶரீராத் ஸ்வாத் ஸஸ்ருக்ஷுர் விவிதா: ப்ரஜா:"- மநுஸ்ம்ருதி

இறைவன் மகாப்பிரளத்தில் அழிந்துபோன உலகங்களையெல்லாம் அவ தாமே தோற்றுவிக்கின்றான். ஆதற்காக அவன் நீண்டகாலம் தபத்திலிருந் சிந்தனையில் ஆழ்ந்திருந்து அதற்குப் பிறகு நினைந்தவாறா உலகங்களையெல்லாம் படைக்கின்றார், இப்படிப்பட்ட எல்லாம் வல் இறைவனே முதல் சிற்பியாவர். இப்படிப்பட்ட பிரபஞ்ச சில்பியா அவ்விறைவனை வேதம் "விஸ்வகர்மா" என்றழைக்கிறது.

இப்பரம் பொருளான ஸ்வயம்புவ புருஷரே சிருஷ்டியின் தொடக்கத்தி சிருஷ்டிகளைச் செய்வதற்கான உண்டான பரப்ரஹ்மா என்று மந்திரங்களி கோஷிக்கப் படுகிறார். இப்படியாக "விஸ்வகர்மா" என்ற விராட் புருஷனி பெருமிதமான வர்ணனையைப் புருஷஸூக்தத்திலும் இவரை முழு முதற்கடவுளாகச் சொல்லும் போது விஸ்வகர்மா ஸூக்தத்திலும் இவரைப் பரமாத்மா என்று நிருக்தத்தில் சொல்லிய படிக் கூறும் பரமாத்ம ஸூக்தத்திலும் பரமாத்மாவான விஸ்வகர்மாவினால் திரும்பி எடுக்கப்பட் ஹிரண்யகர்பா என்ற அவதாரத்தில் த்வஷ்டா என்ற ப்ரஜாபதியாக இருந்து சிருஷ்டியைச் செய்யுமிடத்து ஹிரண்யகர்பா ஸூக்தத்தில் விளக்கமாகவும் மேற் சொன்ன அனைத்து பெருமைகளையும் ஒரு சேரக் கூறும் ப்ரஹ்மாத்மா ஸூக்தத்திலும் அனைத்தையும் படைத்தவராகவும் காப்பவராகவும் இறுதியில் அழிப்பவராகவும் பரப்ரஹ்மாவாக எங்கும் நிறைந்திருப்பவராகவும் வேதங்களில் சொல்லப்படுகிறது. அப்படிச் சொல்லப்பட்ட இவ்வைந்து ஸூக்தங்கள் ப்ரஹ்ம வம்ச ப்ராஹ்மணியர்களுக்கு ஆதார தேயமாக விளங்குகிறது.

ஆகவே, இவ்வைந்து ஸூக்தங்களைப் பஞ்ச ஸூக்தங்களாக வேதமார்க்கமான வைதிகங்களில் விஸ்வப்ராஹ்மணர்கள் கடைப்பிடிக்க வேண்டும் என்று எண்ணி இதனை என் தாய்தந்தையரின் அருளோடும் குருவருளோடும் கடவுள் அருளோடும் வெளியிடுகிறேன்.

இங்ஙனம் ப்ரஹ்ம வம்ஶ ப்ராஹ்மணிய வர்ணத்திற்க்காக,

ஆதிப்ரஹ்ம குலோத்பவ: ஸாநக ரிஷி கோத்ர:
ஆஶ்வலாயந ஸூத்ர ருக் வேத ஶாகீநாம்
**ப்ரஹ்மஸ்ரீ T.M.S. ஸுரேஷ் ஶர்மா, M.B.A.,**
12, குப்புதாசன் தெரு, இராசிபுரம் வட்டம் - 637 408, நாமக்கல் மாவட்டம்.
செல் : 99433 56717



# 2. யஜுர் வேதமறிமுகம்

வேதங்களில் முக்கியமான கர்மமாகிய யஜ்ஞங்களை பற்றி விளக்கமாக கூறுவது யஜுர்வேதமாகும். யஜுர்வேதத்தின் முக்கிய பிரயோகங்களில் முதலிடம் பெறுவது அக்னியே ஆகும், அப்படிப்பட்ட அக்னியின் பிரதான தேவதையாக வேதத்தில் விஸ்வகர்மா கூறப்பட்டுள்ளார். யஜுர் வேதமானது விஸ்வகர்மாவுடன் யஜ்ஞத்தில் ஸ்வயம்பாகத் தோன்றியதாக நிருக்தம் கூறுகிறது. மேலும் ரிஷிகள் பல ரிக்குகளை, யக்ஞங்களில் மந்திரங்களை பாடல்களாக தொகுத்ததால் யஜுஷ் என்ற செயல் பின் விளக்கமுற்று யஜுர் என்ற வேத பெயராயிற்று என்று ஆய்வாளர்கள் கூறுகின்றார்கள். யஜுர்வேதங்களின் விதிமுறைகளை ருஷிகள் காண்டங்களாகவும், அத்யாயங்களாகவும், ஸ்தானங்களாகவும், பிரச்சனங்களாகவும், ப்ராஹ்மாணங்களாகவும், பிரபாடகங்களாகவும், கண்டிகையாகவும், அனுவாகங்களாகவும் பிரித்து வைத்துள்ளார்கள்.

கல்பங்களில் யஜுர்வேதத்தை விஸ்வகர்மா உண்டாக்கினார் என்று ருஷி: ஆபஸ்தம்பர் எழுதிய ஶ்ரௌதச் ஸூத்திரத்தில் கூறியுள்ளார். யஜுர் வேதமானது லிபி(எழுத்து)களில் பயன்பட தொடங்கிய காலம் முன் ஸ்ருதியாக ஒரே பாடமாக மட்டுமே இருந்துள்ளது. லிபிகள் பயன்படுத்தப்பட்ட காலத்திலிருந்து ரிஷிகள் இதை ஶாகை(பிரிவு) என்ற பெயரில் 101 ஶாகையாகச் செய்தார்கள்.

யஜுர்வேதத்தை ஆதியில் ஸ்ரீ விராட் விஸ்வகர்ம பரப்ரஹ்மா தன்னுடைய புத்திரர்களாகிய ஸானகாதி-ப்ரஹ்ம ருஷிகளுக்கும், மரீசியாதி ரிஷிகளுக்கு போதித்தார். பின்னர ரிஷிகளின் பிரவரத்தில் உண்டான வைஸம்பாயன முனிவர் காலத்தில் க்ருஷ்ணயஜுர் சுக்லயஜுர் என இரண்டாக பிரிக்கப்பட்டது. இதற்கு காரணம் ஒருமுறை வைஸம்பாயனார் தன்னுடைய குரு சொன்ன சில வேதக்கருத்துகளைத் தன்னுடைய வித்யா கர்வத்தினால் ஏற்கவில்லை எனவே குருவானவர் நான் கற்றுக்கொடுத்த வித்தையை உண்டதைக் கக்குவது போல் கக்கு என்றார். உடனே வைஸம்பாயனார் தான் கற்ற யஜுர்வேதத்தை பிண்டம் போலக் கக்கினார். அதை அறிந்த தேவர்கள் உடனே தைத்திரிய (மணிபுறா) வடிவங்கொண்டு அதைக் கொத்தித் தின்றார்கள். குரு சொல்லிக்கொடுத்த பழமையான முதல் பாடத்தை க்ருஷ்ண யஜுர்வேதம் (86 ஶாகைகள்) அல்லது தைத்திரிய ஸம்ஹிதை என்று அழைக்கப்பட்டது. பின்னர் வைஸம்பாயன முனிவர் ஶில்பகாஶ்யப ரிஷியின் மகனும் த்வஷ்டா-பிரஜாபதியின் பெருமகனுமான ஸ்ரீ ஸூர்யநாராயண பகவானின் அருட்கடாக்ஷத்தினால் தூய்மையான புதுமையான சுக்ல யஜுர்வேதத்தை கற்றார். இவர் கற்ற சுக்ல யஜுர்வேத (15 ஶாகைகள்) பெருமையைக் கேள்விப்பட்டு, தேவர்கள்

வாஜஸநேயர்களாக (குதிரை முகங்கொண்டு) வந்து கற்றதினால் வாஜஸநேயிந ஸம்ஹிதை என்று அழைக்கப்பட்டது.

இவ்வாறு தேவர்களால், ருஷிகளால் தொகுக்கப்பட்ட யஜுர்வேதத்தின் தைத்திரிய ஸம்ஹிதையிலே மிக அதிகமான மந்திரங்கள் இருக்கும். இதிலுள்ள காண்டங்கள் - 7 ஆகும், இதன் விஷயங்களாவன.

காண்டம்- 1ல், வாமன அவதாரம் ஊர்வசி புரூரவன் கதை ரக்ஷோக்ன மந்திரங்கள், விஷ்ணு ஸூக்தம்.

காண்டம்- 2ல், ஸுவர்பானு அஸுரன் கதை ஸ்வயம்புவமநுவின் பெருமை, இந்திரன், அஸ்விநிகள் பெருமைகள், விருத்திராஸுர உபாக்யானம், த்வஷ்ட-விஸ்வரூப ரிஷியின் தப வலிமையின் பெருமை, இந்திரன் விஸ்வரூபரைக் கொன்றதால் ஏற்பட்ட ப்ரஹ்மஹத்தி தோஷத்தின் விளக்கம். த்வஷ்டபிரஜாபதி அபஸார வேள்வியைச் செய்து விருத்திராஸுரனை யாகத்தில் படைத்த செயல்.

காண்டம்- 3ல், அக்நி ஹோத்திர மந்திரங்கள், விஸ்வாமித்ரருக்கும் வஸிஷ்டருக்கும் ஏற்பட்ட மனவருத்தம், நாபாநேதிஷ்டன் கதை, ஸோம மஹா யாகத்தின் பிரயோக விதிகள் மற்றும் ஸோம மஹாயாகத்தில் இந்திரன் ஸ்ரீ விஸ்வகர்மாவுக்கு முதன்மையாக அளித்த ஸோம பான ஹவிர் பாகத்தின் பெருமைகள் முதலியவையுள்ளன, ஜயாதி மந்திரம், ராஷ்ட்ர ப்ருத் மந்திரங்கள்.

காண்டம்-4 ல், அதிராத்திர அக்னி சயானா மஹா யாக மந்திரங்கள், ஹிரண்யகர்ப ஸூக்தம், பஞ்ச ஹிரண்யேஷ்டகை மந்திரங்கள், ஸ்ரீ ருத்திரம், ஸ்ரீ விஸ்வகர்ம ஸூக்தம், சமகம், த்வஷ்ட ஸூக்தம், இந்திர ஸூக்தம், அக்நி ஸூக்தம், ஸர்ப ஸூக்தம், நக்ஷத்திர ஸூக்தம், ப்ராணா-அபான-சமாநா-வ்யாநா-உதாநா ப்ருத் மந்திரங்கள்.

காண்டம்-5 ல், சுனசேபன் கதை, தேவர்களுக்கு பிரியமான ஸாகிரி(மாமிஸம்) வஸ்துகளின் விளக்கம் இவற்றைச் சிரார்த்த கர்மங்களில் பயன் படுத்தும் விதி, யாகத்தின் போது பலியிடப்படும் விளக்கங்கள்.

காண்டம்-6 ல், ஸுவர்பாணு போட்டி ருத்திரன் பசுபதியான கதை, வராஹ அவதார விளக்கம், இந்திரன் விருத்திரா ஸுரனைக் கொன்ற கதை.

காண்டம்-7 ல், கணித வாய்ப்பாடு, பங்குனி உத்திரம், சித்ரா பௌர்ணமி சிறப்பு, தேசிய கீதம், விராட் வடிவதாரணையில் அஸ்வமேத மஹா யகாத்தின் வர்ணனைகள்.

இக்காரணங்களினால் ரிஷிகள் அவர்களுடைய ஞாபகத் திறன் ஆற்றல் இவற்றிற்கு ஏற்றார்போல் பாடபேத விதிகளை ஸம்ஹிதை அல்லது ஶாகை என்ற பெயரில் விளக்கமுற்றன. பின் ஒவ்வொரு ஸம்ஹிதை அல்லது ஶாகைக்குப் பல கல்பங்களை ரிஷிகள் வெளிப்படுத்தினார்கள்.

இந்தக் கல்பங்களில் நான்கு பிரிவுகள் ஏற்படுத்தப்பட்டன.

1. கிரஹ ஸூத்திரம்:

வீடுகளில் நடக்கும் சோடஷஆசார அநுஷ்டான விதி முறைகளை நடத்தும் விதி. அதாவது ஜநனம் முதல் மரணம் வரை வேத ரீதியாக மந்திர பூர்வமாக நடத்த வேண்டிய கர்ம விதிகளைக் குறித்த விளக்கம்.

2. ஶ்ரௌத ஸூத்திரம்:

18 வகையான யக்ஞங்களை விளக்கமாகச் செய்யும் விதிகளைக் கூறுகிறது.

இதில் ப்ரஹ்மா - யாகத்தினை தலைமையேற்று பார்ப்பவர், உத்கா - யாகத்திற்கு ஸாம கீதைகளிலான மந்திரங்களை ஓதுபவர்கள் மற்றும் ஸோமபவமானங்களை தயார் செய்பவர், அத்வாயுர் - யாகத்தினைத் தலைமையேற்று நடத்துபவர், ஹோதா - யாகவேள்வி சாலை மற்றும் பலிகளைக் கடவுளுக்குத் தயார் செய்பவர்கள் முதலியவர்கள் கடைப்பிடிக்கவேண்டி வேத விதிமுறைகள் பலி விதி முறைகள் முதலியவைப்பற்றி விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது.

3. ஶுல்ப ஸூத்திரம்

வேதிகைகளின் அளவு, மண்டப லக்ஷணம், பலி இட விதிமுறைகளையும், உபகரணங்களின் உயரம் அளவு நிர்ணயத்தைக் கூறுகிறது.

4. தர்ம ஸூத்திரம்

நான்கு வர்ணாச்சிரம, வர்ணத்தார் கடைப்பிடிக்க வேண்டிய தர்ம விதி முறைகளை விளக்கமாக கூறுகிறது. அதாவது ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைஶ்ய, ஶூத்ரர்கள் கடைப்பிடிக்க வேண்டிய ஒழுக்க விதிகளை கூறுகிறது.

மேலும் ஒவ்வொரு ஸம்ஹிதைகளுக்கும் ரிஷிகள் ப்ராஹ்மாணம் என்ற வேத விளக்கப் பகுதியை வரையறுத்து வைத்துள்ளார்கள். அதாவது வேதத்தில் யாகங்களுக்கு விளக்கச் செயல்பாடுகள் மிகக் கடுமையாக இருக்கும். இதற்காக உரைநடை பகுதிகளில் விதிகளை தெளிவுடன் புரோஹிதர்களுக்குச் சொல்லும் வண்ணம் விதிகள் மந்திர பூர்வமாகவும் காணக் கிடைக்கிறது. ஸம்ஹிதைகளின் இறுதியில் அல்லது சாகையின் இறுதிக் கட்டத்தில் ஆரண்யகம் மற்றும் உபநிஷத் முதலிய சிறப்பம்சங்கள் காணப்படுகிறது. இப்படியாக யஜுர் வேதங்களில் பல சாகைகள் மறைந்து இன்று இந்திய அளவில் குறிப்பிட்ட சில ஸம்ஹிதைகள் பெயர் மட்டுமே உள்ளது.

சாகைகள்:

| | |
|---|---|
| 1. தைத்திரிய ஸம்ஹிதை | 2. மைத்ராயணிய ஸம்ஹிதை |
| 3. காடக ஸம்ஹிதை | 4. கபிஷ்டல ஸம்ஹிதை |
| 5. கபிஷ்டலகட ஸம்ஹிதை | 6. காண்வ ஸம்ஹிதை |
| 7. காத்யாயந ஸம்ஹிதை | 8. சுஷராயணிய ஸம்ஹிதை |
| 9. ஸரக ஸம்ஹிதை | 10. பம்வேதாபம்வதரோ ஸம்ஹிதை |
| 11. ஜபாலே ஸம்ஹிதை | 12. வாஜஸநேய ஸம்ஹிதை |

# 3. ப்ரஹ்ம வம்ஶ



# வேதமதிகாரத்துவம்

யஜுர் வேதத்திலுள்ள யாகங்களில் அதிகமான பிரயோக மந்திரங்களைக் கொண்டுள்ள அதிராத்திர அக்னி சயாநா மஹா யாகத்திற்குக் கர்த்தாவாக, புவன ரிஷின் மகனாகிய விஶ்வகர்ம ரிஷி ஆவார். இவர் ஆங்கிரஸ ரிஷியின் பிரவரத்தின் உண்டானவர்.

| | | |
|---|---|---|
| ஶ்ரீ விஶ்வகர்மபரப்ரஹ்ம பிரவரத்தில் | | ஆங்கிரஸ ரிஷி |
| ஆங்கிரஸா | ரிஷியின் பிரவரத்தில் | ஆப்த்யா ரிஷி |
| ஆப்த்யா | ரிஷியின் பிரவரத்தில் | புவநா ரிஷி |
| புவநா | ரிஷியின் பிரவரத்தில் | விஶ்வகர்மா ரிஷி |

இவரால் நிர்ணயம் செய்யப்பட்ட அக்னிசயாநாவில் தான் மிக முக்கியமாக மந்திரங்கள் வருகிறது. இதன் தொடக்கத்தில் வரும் "ஸாவித்திர ஹோமத்தில்" வரும் முதல் மந்திரமானது,

"யுஞ்ஜாந: ப்ரதமம் மநஸ்தத்வாய ஸவிதாதிய:!
அக்நிம் ஜ்யோதிர் நிசாய்ய ப்ருதிவ்யா அத்யா அபரத் !! (1)

இறுதியாக அக்னியைக் குறித்த "விஶ்வகர்மண தேவதா ஹோமத்தில்" ப்ராஹ்மணத்தில் முடியும் மந்திரமானது

"யத்ர தாரா அநபேதா மதோர் க்ருதஸ்ய ச யா: !
ததக்நிர் வைஶ்வகர்மண: ஸ்வர்தேவேஷுநோ ததத் !! (2)

அதிராத்திர அக்நிசயாநா மஹாயாகத்தில் மேற்படி மந்திரங்களுக்கு இடையில் ஶ்ரீவிஶ்வகர்மா ஸூக்தம், இந்திர ஸூக்தம், த்வஷ்டா ஸூக்தம், சர்ப ஸூக்தம், நக்ஷத்திர ஸூக்தம், பரமத்மா ஸூக்தம், ஹிரண்கர்பா ஸூக்தம், புருஷஸூக்தம், அக்நி ஸூக்தம், ஸோம பவமான ஸூக்தம் மற்றும் பித்ரு ஸூக்தங்கள் முதலிய மந்திரங்கள் வருகிறது.

மேற்படி இந்த யாகத்தில் ப்ரஜாபதியான ஶ்ரீ விஶ்வகர்மாவே ஶிவன்(ஶிவன்= சிறந்தவர்/ மங்களகரமானவர்) என்ற நிர்ணயம் மற்றும் பரமாதித்ய வர்ணனை மந்திரம். அக்னியை ஸ்தாபிக்கும் போதும் நினைக்க வேண்டிய ஶ்ரீ விஶ்வகர்மா மந்திரங்கள் மற்றும் இஷ்டகைகளை வைக்கும் போதும் சொல்லக் கூடிய இஷ்டகோபித ஸம்யஜ்ஞ விதான மந்திரங்கள் முதலியவை வருகிறது.

1) கார்கபத்திய அக்நி மந்திரம்
2) ஸாவித்ரஹோம மந்திரம்
3) ப்ராண ப்ருத் மந்திரம்
   1) வஸிஷ்ட ரிஷி
   2) பரத்வாஜ ரிஷி
   3) விஶ்வாமித்ர ரிஷி
   4) ஜமதக்நி ரிஷி
   5) விஶ்வகர்ம ரிஷி
4) அபாநா ப்ருத் மந்திரம்
   1) ஸானக ரிஷி
   2) ஸநாதன ரிஷி
   3) அஹபூந ரிஷி
   4) ப்ரத்ன ரிஷி
   5) ஸுபர்ண ரிஷி
5) விஶ்வதேவிஷ்டகா மந்திரம்
6) ஸ்வயமாத்ருணாயுபதான மந்திரம்
7) ப்ராணா ப்ருத் இஷ்டகோபதான மந்திரம்
8) பரிஷேசனாதி ஸம்ஸ்கார மந்திரம்
9) ஶ்ரீ ருத்திர ப்ரஶ்சநம்
10) ஶ்ரீ விஶ்வகர்ம ப்ரஶ்சநம்
11) சமக ப்ரஶ்சநம்
12) ஜயாதிராஷ்ட்ர ப்ருத் மந்த்ரம்

இதில் "த்வருகஷ்தி" ஸ்தாநகத்தில் "விஶ்வகர்மாத ருஷி" முதல் "ஶ்ரீருத்திரம்" வரை பிரயோகிக்கப்படும் மந்திரம் வரை வருவது "ஶதருத்திரிய ஹோமம்". இதில் கார்கபத்திய யஜ்ஞத்தில் "ஶ்ரீவிஶ்வகர்மஸூக்தம்" வருகிறது. இதைத் தொடர்ந்து சமகம் ப்ரஶ்சனம் வருகிறது. இத்துடன் யாகம் நிறைவு பெறுகிறது. மேற்சொன்ற யாகத்திற்கு ப்ருஹஸ்பதியாக விஶ்வகர்ம ருஷியே படைப்புக் கர்த்தாவாக இருக்கிறார்.

பௌதாயன ருஷியின் கல்பத்தில்
ஶ்ரௌத ஸூத்ரத்தில் 13 வது ப்ரஶ்சனத்தில் 51 வது கண்டிகையில்
கார்கபத்திய அக்நி விதிரிலை

"அத கார்கபத்ய ஆஜ்யம் விலாப்யோத்பூய ஸ்ருசி சதுர் க்ருஹீதம்
க்ருஹீத்வா ஹவநீயே அநிகவந்தம் ஜுஹோத்
அக்நிஸ் திக்மேன ஶோசிஷேத்யநுத்ருத்ய
ஸைநாநீகேந ஸுவிதாத்ரோ அஸ்மே இதி,
ஜுஹோத்யபரம் க்ருஹீத்வாஹவநீய ஏவ வைஶ்வகர்மணாநி ஜுஹோதி,
ய இமா விஶ்வா புவநாநி ஜுஹ்வதித்யநுத்ருத்ய
விஶ்வகர்மா ஹ்ய ஜநிஷ்ட தேவ இதி
ஜுஹோத்யபரம் சதுர் க்ருஹீதம் க்ருஹீத்வா
சக்ஷுஷ: பிதேத்யநு த்ருத்ய
விஶ்வகர்மந் ஹவிஷா வர்தநேநேதி ஜுஹோதி

நாளைவ ஸூக்தாப்யாம் ஜுஹோதி
நாஸைவ ஸூக்தயோர் வீர்யம் ததாதீதி ப்ராஹ்மணம்"

மேற்படி மூன்று வகை அக்நிகளான கார்கபத்தியம், அஹவனீயம், தக்ஷிணாக்நி முதலிய அக்நிகளில் முதன்மையானதும் சிறந்ததுமான கார்கபத்யம் என்ற அக்நியானது "பரமச்சஆதா வர ஆ விவேச" என்ற வேத பிரகாரம் அக்நியை முதன்முதலாக விராட் விஶ்வகர்ம பரப்ரஹ்மாவினால் படைக்கப்பட்டது. இவ்வக்நியை முதலில் தன்னுடைய க்ரஹமகிய விஶ்வத்தில் உலக மக்களுக்காக ஸ்தாபித்தார். ஆகையால் ஸ்ரீ விஶ்வகர்ம ப்ரஹ்ம வம்சத்தவர் க்ரஹத்தில் உண்டாக்கப்பட்ட கார்கபத்திய அக்நியை கொண்டே அனைத்து வித யஜ்ஞ கர்மங்களையும் செய்ய வேண்டும் என்றும், இந்த அக்நிக்கு ஆஜ்யத்தினால் ஹோம செய்விக்க வேண்டும் என்றும் வேதத்தில் விதி நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. இப்படியாக, கார்கபத்தியக்நியில் ஹோமம் செய்யும் போது ஸ்ரீ விஶ்வகர்ம ஸூக்தத்திலுள்ள 17 மந்திரங்களைச் சொல்லி ஹவி தர வேண்டும் எனக் கல்பங்களில் சொல்லப்பட்டுள்ளது.

உலகம் உய்யவே பஞ்ச பூதங்களில் முதன்மையானதும் சிருஷ்டிக்கு அடிப்படையானதுமான அக்நியை பிரதானமாக வைத்து அதற்குக் கர்த்தாவாக விஶ்வகர்மாவே இருந்து இந்த அதிராத்திர அக்நி சயனாவினைப் படைத்தார் என்று வேதங்களில் சொல்லப்படுகிறது. இம்மந்திரம் யஜுர்வேதத்தில் 1.25/4 % பங்காக வேதத்திலுள்ளது. ஆங்கிரஸ பிரவரத்தில் உண்டான விஶ்வகர்ம ரிஷியே யஜுர் வேதத்திலுள்ள இந்த யாகத்திற்கு மூல ரிஷி அதாவது தேவபுரோஹிதர் /ஆச்சாரியர் ஆவார். இப்படியாக வேதத்தில் நிர்ணயம் செய்யப்பட்ட ஸ்ரீ விஶ்வகர்மேஶ்வரனின் பெருமையை கூறும்

ஸ்ரீ விஶ்வகர்ம ஸூக்தங்கள் உள்ள யஜுர்வேத ஶாகைகளின் ஆதாரத்துவம்.

1. தைத்திரிய ஸம்ஹிதை
   4வது காண்டம் 6 ப்ரசன்னம் 2 அனுவாகம்.
2. மைத்ராயணிய ஸம்ஹிதை
   2வது காண்டம் 10 ப்ரபாடகம் 2, 3 அனுவாகம்
3. காடக ஸம்ஹிதை
   18வது ஸ்தானம் 1, 2 அனுவாகம்
4. கபிஷ்டலகட ஸம்ஹிதை
   ப்ரதமஷ்டகம் 28 அத்யாயம் 2, 3 அனுவாகம்
5. வாஜஸநேயிந ஸம்ஹிதை
   17 அத்யாயம் மந்திரம் 17 முதல் 32 வரை
6. காண்வ ஸம்ஹிதை
   18 அத்யாயம் 2, 3 .அனுவாகம்

மேற்குறிப்பிட்ட "ஸ்ரீ விஶ்வகர்மா" ஸூக்தங்களுள்ள ஸம்ஹிதைகளிலில் ஸ்வரம் மற்றும் ஸந்தஸ் வேறுபாடு சாகைக்குச் சாகை சற்று வேறுபாடு காணப்படும்.





# 4. ப்ரஹ்ம வம்ஶ வேதமாதாரத்துவம்

ஸ்ரீ விராட் விஶ்வகர்ம பரப்ரஹ்மாவின் மூலம் பஞ்சப்ரஹ்மாக்களாகிய த்வஷ்டாதிகள் படைக்கப்பட்டார். மேலும் பஞ்சபிரம்ம ருஷிகளாகிய ஸானகாதிகள் உற்பத்தியானார்கள், இவருடைய கர்ப்பத்தில் மானஸிகமாக மேலும் மரிசி, அத்ரி, புலஹ, புலஸ்திய, காஶ்யப, ஆங்கிரஸ, க்ருது முதலியன ஸப்தரிஷிகள் உண்டானார்கள்.

இவர்களின் மூலம் படைப்புத் தொழில் பல விளக்கங்கள் பெற்றுப் பல சாஸ்திரங்கள் உருவாகியது. மேலும் பல ரிஷிகள் இவருடைய பிரவரத்தில் உருவானார்கள். இப்படியாக ஸ்வயம்புவமான ப்ரஹ்ம வம்ஸத்தில் உண்டானவர்கள் வர்ணாச்சிரமத்தில் ப்ராஹ்மண வர்ணத்தையும் ஆச்சாரிய பட்டத்தையும் வேதோக்தமாக பெற்று இருக்கிறார்கள். இவர்கள் அகில பாரதிய அளவில் ஹிந்து மக்களிடையே அனைத்து மாநிலங்களிலும் "ஆச்சாரியர்" என்றே சாஸ்திர பூர்வமாக அழைக்கப்படுகிறார்கள்" என்பது கண்கூடான உண்மை. வேதம் என்ற நிர்ணயம் உருவாகுவதற்குக் காரணம் படைப்புத் தொழிலே ஆக ஸ்ரீ விராட் விஶ்வகர்ம பரப்ரஹ்மாவின் ஸ்ருஷ்டியை ரிஷிகள் செய்யும் போது வேதத்திற்கு ஸமமான உபவேதங்களை படைத்தார்கள். இவைதான் விஞ்ஞான ரீதியாக உருவாக்கப்பட்ட ஶில்பமாமனது உபவேதம் என்று அழைக்கப்படுகிறது அதாவது "ஸ்தபதிய" வேதமெனப்படுகிறது.

*தைத்தீரிய ஶாகீய சுதகத்தில்1-அத்தியாயம், 7-ப்ரஶ்சன்னம்,3-வது அனுவாகம்:*

"யத்தே ஶில்பம் கஶ்யப ரோசானாவத் இந்த்ரியாவத் புஷ்கல சித்ரபானு... ... ஆனுஷ்ரவிக ஏவ நௌ கஶ்யப இதி உபௌ வேதயிதே"

என்று வருகிறது அதாவது ஶில்பகஶ்யப ரிஷியானவர் தன் மகனாகிய இந்த்ரன் முதலியவர்களுக்கு ஶில்பம் என்ற ஞானத்தைப் பயன்படுத்தி பறக்கும் உருவமுடையதும் இயந்திர பொறிகளால் செய்யப்பட்டதுமான புஷ்கல விமானத்தைச் செய்து கொடுத்தார். அப்படிப்பட்ட ஶில்பமானது வேதத்திற்கு உபவேதமாக ஆனது. மேலே சொல்லப்பட்ட சுதகத்தில் ஶில்பகாஶ்யபரிஷி தன் மகனான இந்த்ரனுக்கு பறக்கும் "புஷ்கல விமானத்தை" ஶில்ப சாஸ்திர பூர்வமாக சிருஷ்டித்துக் கொடுத்தார் என்றும் இது யஜுர்வேதத்திற்கு உபவேதமானது என்று வேதத்தில் ஆதாரம் காணப்படுகிறது.

*மைத்திராயணி ஸம்ஹிதையில் க்ரஹ மந்த்ர பாடத்தில் :*

"ருக் ஸாமமயோ ஶில்ப:" ரிக் வேதமும் ஸாம வேதமும் எப்படி ரிஷிகளால் நிர்ணயம் சரியாக வகுக்கப்பட்டுள்ளதோ அதுபோன்று அமைந்துள்ள

நாநைவ ஸூக்தாப்யாம் ஜுஹோதி
நாநைவ ஸூக்தயோர் வீர்யம் ததாதீதி ப்ராஹ்மணம்"

மேற்படி மூன்று வகை அக்நிகளான கார்கபத்தியம், அஹவனீயம், தக்ஷிணாக்நி முதலிய அக்நிகளில் முதன்மையானதும் சிறந்ததுமான கார்கபத்யம் என்ற அக்நியானது "பரமச்சஆதா வர ஆ விவேச" என்ற வேத பிரகாரம் அக்நியை முதன்முதலாக விராட் விஸ்வகர்ம பரப்ரஹ்மாவினால் படைக்கப்பட்டது. இவ்வக்நியை முதலில் தன்னுடைய க்ரஹமாகிய விஸ்வத்தில் உலக மக்களுக்காக ஸ்தாபித்தார். ஆகையால் ஸ்ரீ விஸ்வகர்ம ப்ரஹ்ம வம்சத்தவர் க்ரஹத்தில் உண்டாக்கப்பட்ட கார்கபத்திய அக்நியை கொண்டே அனைத்து வித யஜ்ஞ கர்மங்களையும் செய்ய வேண்டும் என்றும், இந்த அக்நிக்கு ஆஜ்யத்தினால் ஹோமம் செய்விக்க வேண்டும் என்றும் வேதத்தில் விதி நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. இப்படியாக, கார்கபத்தியக்நியில் ஹோமம் செய்யும் போது ஸ்ரீ விஸ்வகர்ம ஸூக்தத்திலுள்ள 17 மந்திரங்களைச் சொல்லி ஹவி தர வேண்டும் எனக் கல்பங்களில் சொல்லப்பட்டுள்ளது.

உலகம் உய்யவே பஞ்ச பூதங்களில் முதன்மையானதும் சிருஷ்டிக்கு அடிப்படையானதுமான அக்நியை பிரதானமாக வைத்து அதற்குக் கர்த்தாவாக விஸ்வகர்மாவே இருந்து இந்த அதிராத்திர அக்நி சயானாவினைப் படைத்தார் என்று வேதங்களில் சொல்லப்படுகிறது. இம்மந்திரம் யஜுர்வேதத்தில் 1.25/4 % பங்காக வேதத்திலுள்ளது. ஆங்கிரஸ பிரவரத்தில் உண்டான விஸ்வகர்ம ரிஷியே யஜுர் வேதத்திலுள்ள இந்த யாகத்திற்கு மூல ரிஷி அதாவது தேவபுரோஹிதர் /ஆச்சாரியர் ஆவார். இப்படியாக வேதத்தில் நிர்ணயம் செய்யப்பட்ட ஸ்ரீ விஸ்வகர்மேஸ்வரனின் பெருமையை கூறும்

ஸ்ரீ விஸ்வகர்ம ஸூக்தங்கள் உள்ள யஜுர்வேத ஸாகைகளின் ஆதாரத்துவம்.

1. தைத்திரிய ஸம்ஹிதை
   4வது காண்டம் 6 ப்ரசன்னம் 2 அனுவாகம்.
2. மைத்ராயணிய ஸம்ஹிதை
   2வது காண்டம் 10 ப்ரபாடகம் 2, 3 அனுவாகம்
3. காடக ஸம்ஹிதை
   18வது ஸ்தானம் 1, 2 அனுவாகம்
4. கபிஷ்டலகட ஸம்ஹிதை
   ப்ரதமஷ்டகம் 28 அத்யாயம் 2, 3 அனுவாகம்
5. வாஜஸநேயிந ஸம்ஹிதை
   17 அத்யாயம் மந்திரம் 17 முதல் 32 வரை
6. காண்வ ஸம்ஹிதை
   18 அத்யாயம் 2, 3 அனுவாகம்

மேற்குறிப்பிட்ட "ஸ்ரீ விஸ்வகர்மா" ஸூக்தங்களுள்ள ஸம்ஹிதைகளிலில் ஸ்வரம் மற்றும் ஸந்தஸ் வேறுபாடு சாகைக்குச் சாகை சற்று வேறுபாடு காணப்படும்.





# 4. ப்ரஹ்ம வம்ஸ வேதமாதாரத்துவம்

ஸ்ரீ விராட் விஸ்வகர்ம பரப்ரஹ்மாவின் மூலம் பஞ்சப்ரஹ்மாக்களாகிய த்வஷ்டாதிகள் படைக்கப்பட்டார். மேலும் பஞ்சபிரம்ம ருஷிகளாகிய ஸானகாதிகள் உற்பத்தியானார்கள், இவருடைய கர்ப்பத்தில் மானஸிகமாக மேலும் மரீசி, அத்ரி, புலஹ, புலஸ்திய, காஸ்யப, ஆங்கீரஸ, க்ருது முதலியன ஸப்தரிஷிகள் உண்டானார்கள்.

இவர்களின் மூலம் படைப்புத் தொழில் பல விளக்கங்கள் பெற்றுப் பல சாஸ்திரங்கள் உருவாகியது. மேலும் பல ரிஷிகள் இவருடைய பிரவரத்தில் உருவானார்கள். இப்படியாக ஸ்வயம்புவமான ப்ரஹ்ம வம்ஸத்தில் உண்டானவர்கள் வர்ணாச்சிரமத்தில் ப்ராஹ்மண வர்ணத்தையும் ஆச்சாரிய பட்டத்தையும் வேதோக்தமாக பெற்று இருக்கிறார்கள். இவர்கள் அகில பாரதீய அளவில் ஹிந்து மக்களிடையே அனைத்து மாநிலங்களிலும் "ஆச்சாரியர்" என்றே சாஸ்திர பூர்வமாக அழைக்கப்படுகிறார்கள்" என்பது கண்கூடான உண்மை. வேதம் என்ற நிர்ணயம் உருவாகுவதற்குக் காரணம் படைப்புத் தொழிலே ஆக ஸ்ரீ விராட் விஸ்வகர்ம பரப்ரஹ்மாவின் ஸ்ருஷ்டியை ரிஷிகள் செய்யும் போது வேதத்திற்கு ஸமமான உபவேதங்களை படைத்தார்கள். இவைதான் விஞ்ஞான ரீதியாக உருவாக்கப்பட்ட ஸில்பமானது உபவேதம் என்று அழைக்கப்படுகிறது அதாவது "ஸ்தபதிய" வேதமெனப்படுகிறது.

*தைத்திரீய பாசீய சுதகத்தில் 1-அத்தியாயம், 7-ப்ரபர்சன்னம், 3-வது அனுவாகம்:*

"யத்தே ஸில்பம் கஸ்யப ரோசானாவத் இந்த்ரியாவத் புஷ்கல சித்ரபானு... ...
ஆஹுப்ரவிக ஏவ நௌ கஸ்யப இதி உபௌ வேதயிதே"

என்று வருகிறது அதாவது ஸில்பகஸ்யப ரிஷியானவர் தன் மகனாகிய இந்த்ரன் முதலியவர்களுக்கு ஸில்பம் என்ற ஞானத்தைப் பயன்படுத்தி பறக்கும் உருவமுடையதும் இயந்திர பொறிகளால் செய்யப்பட்டதுமான புஷ்கல விமானத்தைச் செய்து கொடுத்தார். அப்படிப்பட்ட ஸில்பமானது வேதத்திற்கு உபவேதமாக ஆனது. மேலே சொல்லப்பட்ட சுதகத்தில் சில்பகாஸ்யபரிஷி தன் மகனான இந்த்ரனுக்கு பறக்கும் "புஷ்கல விமானத்தை" ஸில்ப சாஸ்திர பூர்வமாக சிருஷ்டித்துக் கொடுத்தார் என்றும் இது யஜுர்வேதத்திற்கு உபவேதமானது என்று வேதத்தில் ஆதாரம் காணப்படுகிறது.

*மைத்திராயணி ஸம்ஹிதையில் க்ரஹ மந்த்ர பாடத்தில் :*

"ருக் ஸாமமயோ ஸில்ப:" ரிக் வேதமும் ஸாம வேதமும் எப்படி ரிஷிகளால் நிர்ணயம் சரியாக வகுக்கப்பட்டுள்ளதோ அதுபோல அமைந்துள்ள

வேதவிதிகளின் மயமாக ஶில்பவேதத்தை ரிஷிகள் நிர்ணயித்தார்கள் என்று யஜுர்வேதம் புகழ்கிறது.

*ஶதபத-ப்ராஹ்மணம்14-வது காண்டம், அத்யாயம்-6, ப்ரஹ்மணம்-5, அனுவாகம்-3ல்:*

*அத வம்ஶ :*

"யாஜ்ஞவல்க்யாத் யாஜ்ஞவல்ய உத்தாலகாத் உத்தாலகோ அருணாத் அருண உபவேஶேர் உபவேஶி: குஶ்ரே: குஶ்ரே: வாஜஶ்ரவஸோ வாஜஶ்ராவா ஜிஹ்வதோ பாத்யோபாஜ் ஜிஹ்வான் பாத்யோகோ அஸிதாத் வார்ஷகணாத் அஸிதோ வார்ஷகணோ

| | |
|---|---|
| ஹரிதாத்கஶ்யபாத் | ஹரித: கஶ்யப: |
| ஶில்பாதகஶ்யபாச் | ஶில்ப: கஶ்யப: |
| கஶ்யபனைத்ருவே: | கஶ்யபோ நைத்ருர் |

விவாசோ வாகம்பிண்யா அம்பிண்யாத் ஆதித்யாத் ஆதித்யானி மானி ஶுக்லாணி யஜூம்ஷி வாஜஸநேயேன யாஜ்ஞவல்க்யே நாக்யாயன்தே"

**விளக்கம் :**

ஸ்ரீ விஶ்வகர்ம பரப்ரஹ்மாவின் மானஸ புத்திரரும் ஸப்த ரிஷிகளில் ஒருவருமான காஶ்யப ப்ரஹ்மரிஷியின் பிரவரத்தில் திரியாருஷேயர்களாக நைத்ருப-காஶ்யப ரிஷி, ஶில்ப-காஶ்யப ரிஷி, ஹரித-காஶ்யப ரிஷி முதலியவர்கள் உண்டானார்கள்.

ஶில்ப-காஶ்யப ரிஷிக்கு அதிதி மற்றும் திதி என இரு மனைவியர்கள். இதில் அதிதியின் கர்ப்பத்தில் இந்திரன், மித்திரன், வருணன், ஆர்யா, பகா, தாதா, ஸூர்யன் முதலியவர்கள் பிறந்தார்கள். திதியின் கர்ப்பத்தில் விரோசனன், மய ரிஷி முதலியவர்கள் உண்டானார்கள். அதிதி, திதி முதலியவர்கள் தக்ஷ ரிஷி(தக்ஷ-ப்ரஜாபதி)யின் புத்திரிகள் ஆவார்கள்.

நைத்ருப-கஶ்யப ரிஷியின் பிரவரத்தில் ரேப-கஶ்யப ரிஷி, ரைப-கஶ்யப ரிஷி, ஆவத்ஸார-கஶ்யப ரிஷி, ஶாண்டில்ய-காஶ்யப ரிஷி முதலியவர்கள் உண்டானார்கள்.

ஹரித-காஶ்யப ரிஷியின் பிரவரத்தில் தேவல ரிஷி, உத்தாலக ஆருண ரிஷி, வாஜஶ்ரவ ரிஷி, குஶ்ரீ ரிஷி, யாஜ்ஞவல்கிய ரிஷி, காத்யாயன ரிஷி முதலியவர்கள் உண்டானார்கள்.

இப்படியாக ஶுக்ல-யஜுர் வேதமாகிய வாஜஸநேயிநம் என்ற ஶாகை பரம்பரை பரம்பரையாக மேற்சொன்ன ருஷிகளின் கோத்திரத்தவர்களிடம் வந்துள்ளது. சிருஷ்டி என்று வித்தைக்கு வேதத்தையும் உபவேதத்தையும் வேதாங்கத்தையும் முழுமையாகக் கற்ற ப்ரஹ்ம வம்ஸத்வரே ஆச்சாரியர்கள் என அழைக்கப்படுகிறார்கள். வெறும் வேதத்தின் சில பகுதிகளை மட்டும் பயின்று அறத்தைப் பரப்புபவர்கள் குரு என்றே அழைக்கப்படுவார்கள்.

***தைத்திரீய ஆரண்யகம் அத்யாயம்-1, ப்ரஶ்னம்-13, அனு-3ல் :***

"பர மார்தண்டமாஸ்யத்! ஸப்தபி: புத்ரைர் அதிதி:! உபக்ரைத் பூர்வ்யம் யுகம்!
ப்ரஜாயை ம்ருத்யவே தத்! பரா மார்தாண்ட மாபர் அதிதி! தானனுக்ரமிஷ்யாம:!
மித்ரஶ்ச வருணஶ்ச ! தாதா ச ஆர்யமா ச ! அஶும்ஶச்ச பகாஶ்ச !
இந்த்ரஶ்ச விவஸ்வாகும் சேத்யேதே ! ஹிரண்யகர்போ ஹகும் ஸஶ்ஶுசிஷத் !
ப்ரஹ்ம ஜஜ்ஞானம் ததித்பதமிதி! கர்ப: ப்ரஜாபத்ய:! அத புருஷ: ஸப்த
புருஷ:!!" (3)

மேற்படி யஜுர்வேத்தில் ஶில்ப-கஶ்யப ருஷியின் மனைவி அதிதிக்கு ஏழு ஆண்மக்கள் பிறந்தார்கள், இவர்கள் பரமார்தாண்டன் என அழைக்கப்படும் ஆதித்யனின் அம்சம் உடையவர்கள். இவர்கள் ஏழுபேரும் முறையே இந்திராதி தேவர்கள் ஆவார்கள். இவர்கள் கற்பில் பரிசுத்தமான அதிதியின் புத்திரர்கள், பிறப்பிலே ப்ரஹ்ம ஞானமுடையவர்களாக ப்ரஹ்ம வித்துகளாக ப்ரஹ்மபுத்திரரான ஶில்ப-கஶ்யப ருஷிக்கும் அதிதிக்கும் பிரஜைகளாக இவர்களுடைய கர்பத்திலே பிறந்தார்கள். இவர்களே தேவர்களில் சிறந்த ஸப்த புருஷர்களாக பதவிவகிக்கிறார்கள் என்று சொல்லப்பட்டுள்ளது.

இவர்களில் ஶில்பகஶ்யப-ரிஷியே காஶ்யப-ப்ரஜாபதி என்று அழைக்கப்பட்டார் காரணம் தமது சிருஷ்டி தொழிலினால் இவரே தேவர்கள், அஸுரர்கள், மநுஷர்கள் முதலிய ப்ரஜைகளுக்கு பிதாவாக இருந்து அவர்களை வழிநடத்தியிருக்கிறார். இவரே அநேக ஶில்ப சாஸ்திரங்களை உருவாக்கினார் இது வேதத்திற்கு உபவேதமானது. இவற்றில் ஆச்சாரிய லக்ஷணம், பூமி லக்ஷணம் முதல் விமானாதி லக்ஷணம் வரையும் தேவ, அசுர, மநுஷ, ரிஷி, பூதங்களின் அளவு, ஆயாதி லக்ஷணம் மற்றும் அவற்றிற்கு ஜீர்ணோதரன விதி, அஷ்டபந்தன விதி, ப்ராண ப்ரதிஷ்டை, அக்ஷமோக்ஷன விதி முதலியவைகளை ஆச்சாரியராக இருக்கும் ஶில்பியே வேத மந்திர பூர்வமாக செய்யவேண்டும் என்று உபவேதங்களில் விதி நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது. இவருடைய ஸம்பந்தி த்வஷ்டா-ப்ரஜாபதி தேவபுரோஹிதர் மற்றும் இவருடைய மாமனார் தக்ஷ-ப்ரஜாபதி ஆவார்.

மேலும் பரத்வாஜ-ருஷியும் ஶில்பவேதத்தில் அநேக கிரந்தங்களை இயற்றியுள்ளார். இவருடைய மநஸானது எப்பொழுதும் உலகினை சிருஷ்டிக்கும் சிந்தனையிலே இருந்துள்ளது. இவரால் எழுதப்பட்ட "வைமாநிக ஶில்பம்" படியே பறக்கும் விமானங்களை சிருஷ்டிக்கப்பட்டுள்ளது. இது யந்திர ஸர்வஸ்வம், ஆகாஶ தந்திரம் அதாவது விமானங்களை செய்யும் விதி முறைகள் மற்றும் பூமியின் ஆகாஸமார்க்க விதிகளைக் கொண்டது. இவர் குறிப்பிடும் முன்னோடி ருஷிகள் நாராயண-ருஷி, கார்க-ருஷி முதலியவர்கள். விமான ஶில்பத்தில் விமானம் கட்ட உலோகங்கள் பயன்படுத்தியிருக்கிறார்கள், "பகன தர்ப்பணம்" உடையாத கண்ணாடியை பயன்படுத்தினர்கள், மரங்கள் அறைகள் செய்யப்பயன்படுத்தப்பட்டது. இவைகளில் வ்யாஜீ யந்திரமானது எதிரியை அழிக்க தீயை கக்கும், ஸூரம்பக யந்திரமானது அளவில் பெரியது, சாலக

சாலிதம் பிறரால் இயங்குவது, ஸ்வயம் வாஹம் தானாக இயக்கப்படுவது. இப்படிப்பட்ட பரிஸ்பவேதியான பரத்வாஜ ருஷியானவர் ஆங்கீரஸ ருஷியின் பேரனாவார். இவர் சாக்ஷாத் வேதத்தில் சிருஷ்டி கர்த்தாவான விஸ்வகர்மாவின் அம்சமாகச் சொல்லப்படுகிறார் இதற்கு ஆதாரமாக,

"அயம் தக்ஷிணா விஸ்வகர்மா தஸ்ய மநோ வைஸ்வகர்மாணம் .. .. ..
பஞ்சதஸாத் ப்ருஹத் ப்ருஹதோ பரத்வாஜ ருஷி:"

மேலும் ஸ்ருஷ்டிப்ரஜாபதியாக விளங்கிய விஸ்வகர்ம ருஷியைப் பற்றியும் வேதத்தில் அநேகவிடங்களில் வருகிறது. மேற்படியான ருஷிகளின் கோத்திரங்கள் பௌருஷேய ப்ராஹ்மணர்களுக்கு மட்டுமே வருவன ஆகும்

இங்ஙனம் வேதமுணர்ந்த இந்த ருஷிகள் சிருஷ்டி கிர்த்தியத்திற்கு தன்னலமற்ற பொதுநோக்கத்துடன் பொன், பொருள் எதிர்பார்க்காமல் தன்னுடைய படைப்பினை மக்களுக்காக அர்ப்பணித்தார்கள். இதனால் சதுர் வர்ணத்தாரும் இப்படைப்பின் மூலாதாரத்தைக் கொண்டு அவர்களுடைய ஜீவனத்தை நடத்தியும் மற்றவர்களுக்கு அதன் மூலம் உதவியும் வந்துள்ளதற்கு சிருஷ்டியையே பிரதானமாகக் கொண்டு ப்ரஹ்ம வம்ஸத்தவர்கள் வந்துள்ளார்கள் என்பதற்கு வேதமே சாக்ஷியாக விளங்குகிறது.

மேலும் இவைகளுக்கு வேத ஆதாரத்துவ கல்ப பிரயோகங்களிலும் மற்றும் ஸம்ஹிதைகளிலும் வெகு விமர்ச்சையாக ஐந்து திக்குகளுக்கு அதிபதியாக முறையே ஸானக ரிஷி, ஸனாதன ரிஷி, அஹபுன ரிஷி, ப்ரத்ன ரிஷி, ஸுபர்ண ரிஷி முதலியவர்கள் இருக்கிறார்கள் என்றும் இவர்களின் கோத்திரத்தில் வருபவர்கள் ப்ரஹ்மவம்ஸப்ராஹ்மணர்கள், பௌருஷேயப்ராஹ்மணர்கள், தேவப்ராஹ்மணர்கள், விஸ்வகர்மப்ராஹ்மணர்கள், ஆங்கிரஸப்ராஹ்மணாள், பாஞ்சாலப்ராஹ்மணாள் என்ற வேத ப்ராஹ்மணங்களில் சொல்லப்பட்ட நியமனப் பெயரை வேத பூர்வமாகப் பெற்றுள்ளார்கள்.

*மைத்திராயணி ஸம்ஹிதையில் 2 காண்டம் 7வது ப்ரபாடகம் 20வது அனுவில்*

| திசை | ருது | தேவதா | சந்தஸ் | ஸாமன் | ஸ்தோமம் | யுகம் | ருஷி |
|---|---|---|---|---|---|---|---|
| கிழக்கு | வஸந்த | அக்நி | காயத்ரீ | ரதந்தரா | த்ரிவ்ருத் | க்ருதா | ஸாநக |
| தெற்கு | க்ரிஷ்ம | இந்திரன் | த்ரிஷ்டுப் | ப்ருஹத் | பஞ்சதச | த்ரேதா | ஸநாதந |
| மேற்கு | வர்ஷ | விச்வதேவா | ஜகதீ | வைரூப | ஸப்ததச | த்வாபர | அஹபூநா |
| வடக்கு | சரத் | மித்ராவருண | அனுஷ்டுப் | வைராஜ | ஏகவிம்ச | அபிபவ | ப்ரத்நா |
| ஊர்த்வம் | ஹேமந்த | ப்ருஹஸ்பதி | பங்திச் | சக்வரரைவதா | த்ரிணவ | ஆஸ்கந்த | ஸுபர்ணா |

*அபாநா-ப்ருத் மந்திர விளக்கம் :*

ஓ ஹிரண்யமயமான பஞ்ச இஷ்டகங்களே உங்களுக்கு அதிபதியான அபான ப்ருத்ருக்களுக்கு எங்களுடைய வேத வைதீக பூர்வமான நமஸ்காரங்கள்,

திசையில் கிழக்கிற்கும், காலத்தில் வஸந்தமாகவும், தேவதைகளில் அக்நியாகவும், ரூபங்களில் ப்ரஹ்ம ஸ்வரூபமும், சந்தஸுக்களில் காயத்திரியாகவும், ஸாமன்களில் ரதன்தராவாகவும், ஸ்தோமங்களில்



த்ருவிருத்துவாகவும், பின்வரும் ஸ்தோமத்தில் பஞ்சதசமாகவும், இவற்றிற்கு அதிபதியாக விளங்கும் ஸாநகா ருஷியே நீரே வயசுகளில் ஒன்றரை வயதாகவும், வாயுகளில் கீழ்நோக்கிய வாயுவாகவும் யுகங்களில் கிருதா யுகமாகவும், இவற்றிக்கு எல்லாம் ராஜ்ஞாபதியாக விளங்குபவரே நமஸ்காரம்.

திசையில் தெற்குமாக, காலத்தில் க்ரிஷ்மமாகவும், தேவதைகளில் இந்திரனாகவும், ரூபங்களில் க்ஷத்ரிய ஸ்வரூபமும், சந்தஸுக்களில் திரிஷ்டுபாகவும், ஸாமன்களில் ப்ருஹத்வாகவும், ஸ்தோமங்களில் பஞ்சதசமாகவும், பின்வரும் ஸ்தோமத்தில் ஸப்ததசமாகவும், இவற்றிற்கு அதிபதியாக விளங்கும் ஸாநாதநா ருஷியே நீரே வயசுகளில் இரண்டு வயதாகவும், வாயுகளில் தென்வாயுவாகவும், யுகங்களில் திரேதா யுகமாகவும், இவற்றிக்கு எல்லாம் விராடபதியாக விளங்குபவரே நமஸ்காரம்.

திசையில் மேற்குமாக, காலத்தில் வர்ஷமாகவும், தேவதைகளில் விச்வதேவனாகவும், ரூபங்களில் வைஸ்ய ஸ்வரூபமும், சந்தஸுக்களில் ஜகதியாகவும், ஸாமன்களில் வைரூபமாகவும், ஸ்தோமங்களில் ஸப்தசதசமாகவும், பின்வரும் ஸ்தோமத்தில் ஏகவிகும்சமாகவும், இவற்றிற்கு அதிபதியாக விளங்கும் அஹபூனா ருஷியே நீரே வயசுகளில் மூன்று வயஸாகவும், வாயுகளில் மேற்கு வாயுவாகவும், யுகங்களில் துவாபர யுகமாகவும், இவற்றிக்கு எல்லாம் ஸ்வராடபதியாக விளங்குபவரே நமஸ்காரம்.

திசையில் வடக்குமாக, காலத்தில் சரத்துமாகவும், தேவதைகளில் மித்ரா வருணர்களாகவும், ரூபங்களில் ஸூத்ர ஸ்வரூபமும், சந்தஸுக்களில் அனுஷ்டுப்பாகவும், ஸாமன்களில் வைராஜமாகவும், ஸ்தோமங்களில ஏகவிகும்சமாகவும், பின்வரும் ஸ்தோமத்தில் ஸப்தவிகும்சமாகவும், இவற்றிற்கு அதிபதியாக விளங்கும் பிரத்னா ருஷியே நீரே வயசுகளில் மூன்றரையாகவும், வாயுகளில் வடக்கு வாயுவாகவும், யுகங்களில் அபிபவ(முன்கலி) யுகமாகவும், இவற்றிக்கு எல்லாம் ஸாம்ராடபதியாக விளங்குபவரே நமஸ்காரம்.

திசையில் மேல்நேக்குமாக, காலத்தில் ஹேமந்தமாகவும், தேவதைகளில் பிருஹஸ்பதியாகவும், ரூபங்களில் பல ஸ்வரூபமும், சந்தஸுக்களில் பங்க்தியாகவும், ஸாமன்களில் சக்வார ரைவதமாகவும், ஸ்தோமங்களில் திரிணவமாகவும், பின்வரும் ஸ்தோமத்தில் திரியேதிரிங்சமாகவும், இவற்றிற்கு அதிபதியாக விளங்கும் ஸுபர்ணா ருஷியே நீரே வயசுகளில் நான்கு வயசாகவும, வாயுகளில் சுழல்வாயுவாகவும், யுகங்களில் ஆஸ்கந்த(பின்கலி) யுகமாகவும், இவற்றிக்கு எல்லாம் அதிகார அதிபதியாக விளங்குபவரே நமஸ்காரம்.

என்னுடைய பிதாவே, என்னுடைய பாட்டன் மார்களே, என்னுடைய முப்பாட்டன் மார்களே, எங்களுடைய வம்சத்திற்கு பிரவர கர்த்தாவாக இருப்பவர்களே, தேவபுரோஹிதர்களாகிய நங்கள் தற்போது செய்யும் யாகத்திற்கும் அதன் கர்மத்திற்கும் நீங்கள் எப்பொழுதும் இருந்து எங்களை ஆசிர்வதிப்பீர்களாக.



# 5. ப்ரஹ்ம வம்ஶ



# வேதநிரூபணம்

*ஶதபத-ப்ராஹ்மணம் காண்டம்-14ல், 2-அத்யாயம், 6-ப்ராஹ்மணம், 3வது அனுவாகம் நிரூபணம்.*

"ஆபூதெஸ் த்வஷ்ட்ராதாபூதிஸ் த்வஷ்ட்ரா விஶ்வரூபாத் த்வஷ்ட்ராத் விஶ்வரூபஸ் த்வஷ்டரோ அச்விப்யாமாஶ்விநௌ ததீச ஆதர்வணாத் தத்யங்ஙாதர்வணொ தைவாதத்வா தைவாம்ருத்யோ: ப்ராத்வம் ஸநாந்ம்ருத்யு: ப்ராதவ்ம் ஸந: ப்ரத்வம்ஸநாத் ப்ரத்வம்ஸந ஏகர்ஷேகர்ஷி விப்ரசித்தேர் விபரசித்தர் வ்யஷ்டேர் வஷ்டி: சநாரே: சநாரு: ஸநாதநாத் ஸநாதந: ஶாநகாத் ஶாநக : பரமேஷ்டிந: பரமேஷ்ட ப்ரஹ்மணோ ப்ரஹ்ம ஸ்வயம்பு ப்ரஹ்மணே நம:"

*விளக்கம் :*

ஸ்வயம்புவாக உண்டான ஸ்ரீ விஶ்வகர்மபரப்ரஹ்மத்தில் ஆதியில் ஏகாருஷேயர்களாக ஶாநக, ஸநாதனாதி ப்ரஹ்மருஷிகள் உண்டானார்கள். பின்னர் ருஷிகளின் பிரவரத்தில் சனந்தன ரிஷி, சனக்குமார ரிஷி, வியஷ்டி ரிஷி, தைவாம்ருத்ய ரிஷி, விப்ரசித்த ரிஷி, ப்ரத்வம்ஸ ரிஷி, அதர்வண ரிஷி, ததீச ரிஷி, த்வஷ்டா-விஶ்வரூபா ரிஷி, த்வஷ்டா-ஆபூத ரிஷி, ஆங்கிரஸ ரிஷி, யாஸ்க ரிஷி, அயாஸ ரிஷி முதலியவர்கள் உண்டானார்கள் என்று மேற்படி வேதத்தில் சொல்லப்பட்டுள்ளது.

***தைத்திரிய ஸம்ஹிதை 4 காண்டத்தில் 3வது ப்ரச்சனம் 3 அனுவில்***

ஸ்வயம்புவ புருஷரான விஶ்வகர்மா பரப்ரஹ்மத்தில் தோன்றிய பஞ்ச-ப்ரஹ்மருஷி பெயர்கள்

| | |
|---|---|
| ப்ராசீ திசாம் வஸந்த ருதூ. . . . | ஶாநக ரிஷி: |
| தக்ஷிணா திசாம் க்ரீஷ்ம ருதூ. . | ஸநாதந ரிஷி: |
| ப்ரதீசீ திசாம் வர்ஷா ருதூ. . . | அஹபூந ரிஷி: |
| உதீசீ திஶாகும்.......... . . . . | ப்ரத்ன ரிஷி: |
| ஊர்த்வா திசாகும் ......... . . . . | ஸுபர்ண ரிஷி: |

*ருக்வேதம் மண்டலம்-10, ஸூக்தம்-81, மந்திரம்-4 (ம) யஜுர் வேதத்திலுள்ள விஶ்வகர்ம ஸூக்தப்படி:*

ஸ்வயம்புவ புருஷனின் படைப்பின் மூலத்தினை புவந-ப்ரஜாபதியின் மகன் விஶ்வகர்ம-ருஷி கேட்ட ஆச்சரியமான இக்கேள்விக்கான மந்திர பூர்வ ஆதாரம்,

"கிகும் ஸ்வித் வநம் க உ ஸ வ்ருக்ஷஆஸீத் யதோ த்யாவாப்ருதிவீ நிஷ்டதக்ஷு:!
மநீஷிணோ மநஸா ப்ருச்சதேது தத் யதத்ய திஷ்டத் புவநாநி தாரயந் !!" (4)

அதாவது இப்பூமியையும் எண்ணற்ற கோளங்களையும் ஒரு மரத்தினை சீவி உண்டாக்கினரல்லவா? அந்த காடாகப்பட்டது எது? அம்மரமாகப்பட்டது யாது? அறிவாளிகளே மனத்தினால் சிந்தித்துப் பாருங்கள். இவற்றைத் தாங்கியவாறு இவ்வேலைகளைப் பொறுப்பேற்று நடத்தியவர் யார்?. அதற்தான விடையை புவந-ருஷிக்கு தைத்திரியப்ராஹ்மணம் காண்டம்-2, ப்ரசன்னம்-8, 76 (ம) 77 முதலிய அனுவில் சொல்லப்பட்டுள்ளது.

"ப்ரஹ்ம வநம் ப்ரஹ்மஸ வ்ருக்ஷஆஸீத் யதோ த்யாவாப்ருதிவீ நிஷ்டதக்ஷு:!
மநீஷிணோ மநஸா விப்ரவீமிவம் ப்ரஹ்மாத்யதிஷ்டத் புவநாநி தாரயந் !!" (5)

*ப்ரஹ்ம நிர்ணயம் விளக்கம் :*

ஸர்வத்திற்கும் கர்த்தாவாக இருக்கும் ஸ்வயம்புவ புருஷரான விஶ்வகர்மனே அந்தப் பரப்ரஹ்மம் என்ற வனம், அம்மரமும் அந்த ப்ரஹ்மமே தான், காரணம் அவராலே "பூ"லோகமும், "புவ"லோகமும், "ஸுவ"ர்கலோகமும் படைக்கப்பட்டுள்ளது, அந்த ப்ரஹ்மாகிய அம்மரத்திலிருந்து சீவி எடுக்கப்பட்ட ஆரணிகட்டை மூலமாகவே படைப்பிற்கு ஆதாரமான அக்நி முதன்முதலில் (பஞ்சபூதங்களும்) படைக்கப்பட்டது. அறிஞர்களே மனத்தினால் ஆழ்ந்து சிந்தித்துப் பார்த்துக் கூறுகிறேன். ஸ்வயம்புவாக தோன்றிய விஶ்வகர்மனே (யாஸ்கமுனி நிருக்தப்படியும்) இவற்றையெல்லாம் பரமாத்மாவாக எடுத்துக்கொண்டு இப்பணியைச் செய்து முடித்திருக்கிறார் என்று தேவ-ப்ரஹ்மணானாகிய புவந-ருஷிக்கு விடை சொல்லப்பட்டுள்ளது.

ஆகவே, வேதத்தில் சிருஷ்டி கர்த்தாவை குறிக்கும் ப்ரஹ்ம, ப்ரஜாபதி, பரமேஷ்டி என்ற வார்த்தைகள் விஶ்வகர்மா, தவஷ்டா, மனு, காஶ்யபா, ருபுக்களையே மிக அதிகமாக அழைக்கப்பயன் படுத்தப்பட்டுள்ளது. இதற்கு ஆதாரமாக மேற்படி ஶதபத-ப்ராஹ்மண மற்றும் ருக்கின் ருபுக்ஷண, அங்கிரோகண, ப்ருகுகண மந்திர ஸமிக்ஞை நிரூபணத்தினை காண்க.

வேதத்தில் சொல்லப்பட்ட மேற்படி கருத்துகளிலிருந்து சிருஷ்டி கர்த்தாவின் வம்ஶத்தில் உற்பவித்த ஶாநகாதி-ப்ரஹ்மருஷிகளின் கோத்திரதாயாதிகளே ப்ரஹ்ம வம்ஶத்தவர்கள் என்ற முழுமையான அங்கீகாரத்தினை பெற்றுள்ளமைக்கு வேதத்தில் இதைவிட தெளிவான சாக்ஷியம் தேவையில்லை என்று நினைக்கிறேன். இது "ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு பதம்" என்ற பழமொழிக்கு ஏற்ப வேதத்தில் அமைந்துள்ளது.

*காத்யாந-கல்பத்தில் ப்ரௌத ஸூத்திரத்தில் 17 ப்ரஶ்சனம் 9 கண்டிகை 1 மந்திரத்தில்*

ஸ போதி ஸூரிர்மகவா வஸுபதே வஸுதாவந் !
யுயோத்யஸ்மத் த்வேஷாகும்ஸி விஶ்வகர்மணே ஸ்வாஹா !! (6)

அதாவது காத்யான-ருஷியின் ஸூத்திரப்படி "ஆஜ்யம் விஶ்வகர்மண இதி ஜுஹோதி ஸ்வாஹா" என்று சொல்லி ஆஜ்யத்தினால் ஹவி தர வேண்டும், மேலும் "விஶ்வகர்மணே ஸமஸ்த ஜகத் ஸ்ருஷ்டி ஸ்திதியாதிகர்யே துப்யம்"

"தேவயஜநபரிக்ரஹ"மந்திரத்தின் படி யஜுர்வேதத்தில் பிரதான தேவதையாக விஸ்வகர்மாவும் அந்தமுமாகம் காயத்திரி சொல்லப்பட்டுள்ளது. "ஸ போதி" என்ற வாக்கியத்தின் படி ஸோமாஹுதி செய்யவேண்டும். மேலும் அனைத்துப் படைப்பினையும் செய்யும் ஸ்ரீ விஸ்வகர்மனே எங்களை எதிரிகளிடமிருந்து காத்து அவர்களைத் தண்டிக்க வேண்டும், மற்றும் மகவானான நீங்களே எங்களை ரக்ஷிக்க வேண்டும். அதுமட்டுமின்றி எங்களுக்கு அனைத்துச் செல்வங்களையும் வாரிவழங்க வேண்டும் என்று வேண்டப்படுகிறது. மேற்படி ஜகச்சிருஷ்டி கர்த்தாவான விஸ்வகர்மவே பரப்ரஹ்மாவாகச் சொல்லப்பட்டுள்ளார்.

***தைத்திரீய ஸம்ஹிதை : காண்டம் 2 ப்ரபசன்னம் 5 அனுவாகம் 1ல்***

"விஸ்வரூபோ வை த்வாஷ்ட்ர: புரோஹிதோ தேவானாமாஸீத் ஸ்வஸ்ரியோ அஸுராணாம் தஸ்ய த்ரீணி ஸீர்ஷாண்யாஸன்த் ஸோம பானகும் ஸுரா பானகும் அன்னாதனகும் ஸ ப்ரத்யக்ஷம் தேவேப்யோ பாகமவ தத் பரோ அக்ஷமஸுரேப்ய: ....................... வஜ்ரமாதாய ஸீர்ஷாண்யச்சித் யத் ஸோம பானாஸீத் ஸ கபிஞ்ஜலோ அபவத் யத் ஸுராபானகும் ஸ கலவிங்கோ யதன்னாதனகும் ஸ தித்திரிஸ் தஸ்யாஞ்ஜலினா ப்ரஹ்மஹத்யாம் உபாக்ருஹ்ணாத்தாகும் ஸம்வத்ஸரமபிபஸ்தம் பூதான்யப்ய க்ரோஸன் ப்ரஹ்மஹன்னிதி".

***விளக்கம் :***

ஸ்ரீ த்வஷ்டப்ரஜாபதியின் மகன் விஸ்வரூபருஷி (த்ரிஸீர்ஷன்) தேவர்களுக்கு புரோஹிதம் செய்யும் ஆச்சாரியனாக இருந்தார். இவருடைய தாய் திதியின் மகள் விரோசனின் தங்கை. இவருக்கு மூன்று முகங்கள் இருந்தது. இவர் ஒருமுகத்தால் ஸோம பானமும் இரண்டாவது முகத்தால் ஸுரா பானமும் மூன்றாவது முகத்தினால் அன்னபானாதிகளை படைக்கும் ஆற்றல் கொண்டவர். தன் தபோ வலிமையால் ரிக், யஜுர், ஸாம வேதங்களின் மந்திரங்களை தன் மூன்று முகத்தினால் ஓதும் வல்லமை பெற்றவனாக இருந்தார்.

ஒரு நாள் ஸில்பகஸ்யப ரிஷியின் மகனும் தேவர்களின் தலைவனுமான இந்திரன் ஸோம மஹா யாகம் நடத்தினான். அப்பொழுது அந்த யாகத்திற்குத் தேவபுரோஹிதராக ஸ்ரீமான் விஸ்வரூப ஆச்சாரியார் வந்தார். ஸோம யாகத்தின் ஹவியில் இறுதியாக இவருடைய மாமன்மைத்துனர்களாகிய விரேசனனுக்கு ஸோம பானத்தினை ஹவிர்பாகமாக கொடுத்தார். இதையறிந்த இந்திரன் விஸ்வரூபரைக் கொல்ல முற்பட்டான். ஆகவே இந்திரன் தன்னுடன் இருந்த தக்ஷனை அழைத்து அவர் கையிலிருந்த பரசுவினால் அவருடைய மூன்று தலைகளையும் வெட்டச் சொன்னான். ஆனால் அதற்கு தக்ஷன் ப்ரஹ்ம வம்ஸத்திலுண்டான ப்ராஹ்மணனைக் கொன்றால் ப்ரஹ்மஹத்தி தோஷம் பிடிக்கும் என்றார்.

ஆனால் கோபமுற்ற இந்திரன் நான் என்ற கர்வத்தினால் அறிவிழந்து வெட்டத்துணிந்தான். முதல் முறை வெட்டும் போது விஸ்வரூப ரிஷியை வெட்ட முடியவில்லை காரணம் அமிர்தம் உண்டவர் என்பதினால் திரும்பி அஸ்திர மந்திரத்தை ஜபித்து வெட்டினான். பின்னர் மூன்று தலைகளும் மூன்று பறவைகளாக உருமாறின (கபிஞ்ஜலம்-வான்கோழி: கலிங்கம்-மீன்கொத்தி: தித்திரி-மாடப்புறா). உடனே அவருடைய ப்ரஹ்மாத்மா ப்ரஹ்மஹத்தி என்ற மிகப்பெரிய பூத உருவங்கொண்டு இந்திரனை பிடித்தது. இதனால் மூன்று தோஷங்களுக்கு ஆளாகினான். பின்னர் இக்குழுவாயை கன்னிப்பெண்ணுக்கும் புண்ணிய நதிகளுக்கும் தாவரஜங்கமங்களுக்கும் அழித்து பின் திருகேதீஸ்வரம் சென்று தோஷநிவர்த்தி செய்துக்கொண்டான்.

***தைத்திரீய-ப்ராஹ்மணம் காண்டம்-3, ப்ரபசன்னம்-1, அனுவாகம்-9ல்:***

"த்வஷ்டா நக்ஷத்ரமப்யேதி சித்ரம்.. .. .. ரூபாணி பிகும்ஸன் புவநாநி விஸ்வா"

அதாவது த்வஷ்டா என்ற தேவதை நக்ஷத்திரங்களில் சித்திரைக்கு அதிபதியாவார். இவர் ஆதித்யர்களில் முதலாவது ஆத்தியஸ்வரூபம் அதாவது சித்திரை மாதத்திற்கு அதிபதியாவார். மற்றும் உலகங்களையும், உயிர்களையும் சிருஷ்டிக்கும் தேவனாவார் என்று மேற்படி ப்ராஹ்மணத்தில் சொல்லப்பட்டுள்ளது.

***ஆபஸ்தம்ப-ருஷியின் க்ரஹ ஸூத்திரத்தில்***
***1) பிரச்னம்-1, காண்டம்-8, மந்திரம்-10ல்***

"த்வஷ்டா ஜாயாம ஜநய த்வஷ்டாஸ்யை த்வாம் பதிம்
த்வஷ்டா ஸஹஸ்ரமாயூகும்ஷி தீர்கமாயு: க்ருணோது வாம்" (7)

**விளக்கம் :** த்வஷ்டா என்ற தேவன் இந்த எனது பத்தினியை உண்டு பண்ணினார், த்வஷ்டப்ரஹ்மனின் சங்கல்பத்தினால்தான் இந்தப் பெண்ணை நான் மனைவியாக அடைந்தேன். த்வஷ்டா என்ற தேவன் இந்தக் கன்னிகைக்கு என்னை கணவனாக உண்டுபண்ணினார். ஓ கன்னிகே என்னை நீ கணவனாக வடைந்ததற்க்கும் த்வஷ்டா என்ற தேவனின் சங்கல்பமே காரணம். அந்த த்வஷ்டப்ரஹ்மனே அநேக விதமான தனத்தையம், நீண்டிதான ஆயுளையும் நம்மிருவருக்கும் செய்ய வேண்டும்.

மேற்படி ஆபஸ்தம்பீயஸூத்திர பிரகாரம் கன்னிஹாதானம் முடிந்த பிறகு கிருஹத்தினுடைய ஈசான திக்பாகத்தில் அக்நியை பிரதிஷ்டை செய்து ஆஜ்யபாகம் என்ற கர்மம் வரச்செய்து பத்தினி வரனைத் தொட்டுக் கொண்டிருக்கும் பொழுது இம்மந்திரத்தினைச் சொல்லி ஆஹுதியைச் செய்து ஜயாதி ஹோமம் செய்ய வேண்டும் பிறகு பரிஷேசனம் என்ற கர்மம் வரைச் செய்யவேண்டும் என்ற விதி விதிக்கப்பட்டுள்ளது. ஆகவே த்வஷ்டா என்ற பிரம்ஹா ஜீவ சிருஷ்டியின் பிரதான கடவுள் சொல்லப்பட்டுள்ளது.

அதுமட்டும்மின்றி சதுர்வேதங்களிலும் த்வஷ்டப்ரஹ்மாவே கர்ப்போற்பத்திக்குக் காரண புருஷர் என்று கர்ப்பகர்த்தஸூக்தத்தில் சொல்லப்பட்டுள்ளது.

*2) ப்ரசன்னம்-1, காண்டம்-11, மந்திரம்-4ல்*

"ப்ரஜாபதே தந்வம் மே ஜுஷஸ்வ த்வஷ்டர்தேவேபிஸ் ஸஹஸாம இந்த்ர"

"த்வஷ்டா ரூபாணி பிகும்ஸது"

மேற்படி மந்திரத்தில்க் கர்ப்பத்திற்கு கைகால் முதலிய அங்கங்களை ஏற்படுத்தும் சாமர்த்தியம் த்வஷ்டா என்ற தேவனிடமிருப்பமால் அவரது சான்னித்தியம் சரீரத்தில் பிரார்த்திக்கப்படுகின்றது. மேற்படி இவற்றிற்கு ஆதாரமாக கல்ப ஸூத்திரங்களுக்கு உரை செய்த ஹரதத்தர், ஸுதர்சனர், கடலாங்குடி ஸ்ரீநிவாஸ சாஸ்திரி முதலியவர்களின் பாஷியம் வெகு விமர்ஸையாக உள்ளது.

மேற்சொன்ன வேத விளக்கத்திலுருந்து ப்ரஹ்ம வம்ஸ ப்ராஹ்மணர்களின் வேத அதிகாரமும் ஆச்சார்யத்துவமும் ப்ரஹ்மஹத்தி தோஷங்களின் விளக்கமும் வேதத்திலே விதி நிர்ணயிககப்பட்டுள்ளது.

*தைத்திரீய ஸம்ஹிதை காண்டம்-6, ப்ரசன்னம்-4, அனு-10ல்*

"ப்ருஹஸ்பதிர் தேவானாம் புரோஹித. . . . .

ஸ ப்ரதம: ஸம்க்ருதிர் விஸ்வகர்மேத்ய வைனாவாத்மன இந்த்ராயா ஜுஹர் இந்த்ரோ"

ஸ்ரீ விஸ்வகர்மப்ரஹ்ம ஸப்த ருஷிகளில் ஒருவரான ஆங்கிரஸ ரிஷியின் பிரவரத்தில் தோன்றிய ப்ருஹஸ்பதி ரிஷி தேவபுரோஹிதராக ஆச்சாரியராக இருந்து அஸ்வ-மேத மஹா யாகத்தினை நடத்தும் போது தேவர்களில் முதன்மையான ஸ்ரீ விஸ்வகர்மா விறகே முதன்மையான ஹவிர் பாகத்தைத் தந்து இருக்கிறார் பின்னரே மித்திரன், வருணன், அக்நி முதலியவர்களுக்கும் பின் இந்திரன், ப்ருஹஸ்பதி முதலியவர்களுக்குத் தரப்பட்ட விதியின் நிர்ணயம் வேதத்திலே மந்திர பூர்வமான ஆதாரம் காண்பிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அனைத்து யாகங்களிலும் முதல் அவி பெறும் முதல் கடவுள் ஸ்ரீ விஸ்வகர்மாவே.

*பௌதாயந-ருஷியின கல்ப-ஸூத்ரத்தில்*
*ஸ்ரௌத ஸூத்திரம் 10-ப்ரசன்னம் 35-கண்டிகையில்,*

"பரிம்ருஜ்ய ஸாதயத்யெஷ தெ யோநி: ப்ரஜாபதயே த்வேத்யதாத: .. முதல் தொடங்கி ப்ராணா ப்ருத் முடிந்து பின் வருவது அபாந ப்ருத் மந்திரம் தாதபாநப்ருத்பி: ப்ரதயூ ஹதி

"ப்ராசீம் திசாம் வஸந்த ருதூநாம் அக்நிர்தேவதா ப்ரஹ்ம த்ரவிணம்
த்ரிவ்ருத் ஸ்தோம: ஸ உ பஞ்சதச வர்தநிஸ் த்ரவிர்வய:
க்ருதம்யாநாம் புரோவாதோ வாத: ஸாநக ருஷிர்:" இதி

வாசயதி பிதர: பிதாமஹா:பரே அவர இதி யே புரஸதாத் பவந்தி
தக்ஷிணா திசாமிதி யே தக்ஷிணதோ பவந்தி
ப்ரதீசி திசாமிதி யே பஞ்சாத் பவந்த்
உதீசி திசாமிதி ய உத்தரதோ பவந்த்
ஊர்த்வா திசாமிதி ய உபரிஷ்டாத"



மேற்சொன்ன கல்பப்பிரகாரம் பஞ்ச ஹிரண்யேஷ்டகைகளைப் பிரதிஷ்டை செய்தபிறகு முதலில் ப்ராணாப்ருத் ஸம்யஜ்ஞ இஷ்டக விதான மந்திரத்தைவ் சொல்லிய பின் அபாநாப்ருத் ஸம்யஜ்ஞ இஷ்டக விதான மந்திரத்தை சொல்லி அக்நிக்குர் பூர்ணாஹுதி அளிக்கவேண்டும் அப்படி செய்யாவிட்டால் அக்நி கார்யம் முழுமையாக நிறைவு பெறாது என்று வேதத்தில் விதியுள்ளது.

மேற்படியாக, பிரம்ம வம்ஸ பிராமணர்களுக்கு வேதத்தில் காயத்ரி முதலாக ஐந்து சந்தஸ்களும்,

இரதந்தரம் முதலாக ஐந்து ஸாமன்களும், த்ரிவ்ருத் முதலாக ஐந்து குண்டங்களும், கிழக்கு முதலாக ஐந்து திசைகளும், அக்னி முதலாக ஐந்து தேவதைகளும், ஸாநகர் முதலாக ஐந்து ப்ரஹ்ம ரிஷிகளின் கோத்திரங்களும், மரீசி, அத்ரி முதலாக ஸப்த ரிஷிகளின் கோத்திரங்களும் வேதத்தில் நியமிக்கப்பட்டுள்ளது.

*தைத்திரிய ஸம்ஹிதை காண்டம் 4 ப்ரபாடகம் 2 அனு 10ல்*

"ப்ராணப்ருத உபதாய ஸம்யத உப ததாதி ப்ராணதேவாஸ்மிந்தித்வா ஸம்யத்பி:
ஸம்யச்சதி தத் ஸம்யதாகும் ஸம்யதடதமதோ
ப்ராண எவாபாநம் ததாதி தஸ்மாத் ப்ராணபாநௌ ஸம்சரத:"

யஜுர் வேதியதைத்திரிய ஸம்ஹிதையின் படி ஐந்து வித வாயுக்களில் முக்கியமானதும் ஜீவன்களுக்கு ப்ரதானமானதுமான ப்ராணன் மற்றும் அபானன் முதலியவை எப்படி ஒன்றோடு ஒன்று தொடர்புடையவையாக இருக்கிறதோ, ஒன்றின் ஆற்றல் மற்றொன்றுடன் ஸம்மந்தமுடையதாக இருக்கிறது. இப்படியாக ஐந்து செங்கற்களை வைக்கும் போது அவற்றின் மூலாதார ரிஷிகளையும் மேலும் அவற்றிற்கு அதிகார பூர்வமான ரிஷிகளையும் நினைத்து யக்ஞ கர்மங்களை மேற்கொள்ள வேண்டும்.

*சிறு விளக்கம் :*

ஜீவனின் ஆத்மா இயங்க ப்ராண வாயு முக்கியம். இப்பிராணனின் செயல் ஜீவன் செயல்பட வைக்கும் மூலாதார உந்து ஸக்தியாக அபானன் வாயு விளங்குகிறது. இத்தத்துவ அடிப்படையின்படி ஆதியில் ஸ்வயம்புவ விஸ்வகர்ம ப்ரஹ்மத்தில் உண்டான ஸானக ரிஷி, ஸநாதந ரிஷி, அஹபூந ரிஷி, ப்ரத்ந ரிஷி, ஸுபர்ண ரிஷிகளின் மூலம் ஏற்பட்ட ப்ராஹ்மணியம் என்ற வர்ணத்திற்கு ப்ராணனாக வஸிஷ்ட ரிஷியும், மனஸாக பரத்வாஜ ரிஷியும், சக்ஷுவாக விஸ்வாமித்ர ரிஷியும், ஸ்ரோத்ரமாக ஜமதக்நி ரிஷியும் மற்றும் அனைவருக்கும் மேலாக வாக்கிற்கு அதிபதியாக விஸ்வகர்மா ரிஷி முதலியவர்கள் உண்டாக்கப்பட்டு இருக்கிறார்கள் என்பது வேதம் கூறும் உண்மை.

*பதபத-ப்ராஹ்மணம் காண்டம்-9, அத்தியாயம்-2, ப்ராஹ்மணம்-3, அனுவாகம்-42ல்*

"அத வைஶ்வகர்மணீம் ஜுஹோதி ! விஶ்வகர்மா அயமக்நி: ! தமேவைதத் ப்ரீணாதி !

"சித்திம் ஜுஹோமி மநஸா க்ருதேன" இதி ! சித்தமேஷாம் ஜுஹோமி ச க்ருதேன சேத்யேதத் !

"யதா தேவா இஹாகமன்" யே அஸ்ய ஸர்வஸ்ய பூதஸ்ய பதிஸ் தஸ்மை ஜுஹோமி !

விஶ்வகர்மண இத்யேத் தத் விஶ்வாஹாதாப்யகும் ஹவிரிதி ஸர்வதைவாக்ஷிதகும் ஹவிரித்யேதத் !!"

மேற்படி ப்ராஹ்மணத்தில் கார்ஹபத்திய அக்நியை யாகத்திற்காக ஸ்தாபிக்கும் போது வாஜஸநேயின ஸம்ஹிதையின் அத்யாயம்-17, மந்திரம்-78யை சொல்லிய பின்னரே அதிராத்திர அக்நிசயனத்திற்கு பூர்ணாஹுதிகளை தரவேண்டும் என்றுள்ளது.

"சித்திஞ் ஜுஹோமி மநஸா க்ருதேன ததா தேவா இஹாகமந்விதி ஹோத்ரா ருதாவ்ருத:

பதயே விஶ்வஸ்ய பூமநோ ஜுஹோமி விஶ்வகர்மணே விஶ்வாஹாதாப்யகும் ஹவி:" (8)

அதாவது அக்நியை படைத்த கர்த்தாவே விஶ்வகர்மணே நீயே கார்ஹபத்திய அக்நியின் பிரதான தேவதையாக விஶ்வகர்மணியாக (காயத்ரி) இருந்து பூ: என்ற பூலோகத்தினையும், புவ: என்ற அந்தரிக்ஷலோகத்தினையும், ஸுவ: என்ற ஸுவர்க்கலோகத்தினையும் படைத்த சிருஷ்டிகர்த்தா என்று சொல்லப்பட்டுள்ளது, நம்முடைய நல்ல எண்ணங்களை நிறைவேற்றும் பொருட்டு இங்குப் பிரார்த்திக்கப்படுகிறது, ஸமுத்திரங்களுக்கும் மற்றைய பூதங்களுக்கும் தலைவனாகவும், முதலில் பிறந்தவரும் விஶ்வத்திற்கும், ஸர்வத்திற்கும் கர்த்தாவாகவும், அதிபதியுமானவருமான விஶ்வகர்மனே உம்மை நினைத்து உனது பக்தனான நாங்கள் இவ்வக்நியில் ஹவி தருகிறோம். நீங்கள் எங்களுக்கு அனைத்துச் செல்வங்களையும் வழங்குவீர்களாக.

*ப்ரஹ்ம வம்ஶத்தவர்களின் வேத, உபவேத, கோத்திர, ஸூத்ர, மாங்கல்ய விதி விவரங்கள் :*

***யஜுர் வேதத்தில் வரும் பஞ்சப்ரஹ்மஹருஷிகளின் கோத்திரங்கள் :***

1) ஸாநகா-ருஷி, 2) ஸநாதநா-ருஷி, 3) அஹபூநா-ருஷி, 4) ப்ரத்நா-ருஷி,

5) ஸுபர்ணா-ருஷி

*பிரதான 25 மஹருஷிகளின் கோத்திரங்கள் :*

1) மரீசி-ருஷி, 2) அத்ரி-ருஷி, 3) புலஹ-ருஷி,
4) புலஸ்த்ய-ருஷி, 5) ஆங்கிரஸ-ருஷி, 6) காஶ்யப-ருஷி,
7) க்ரது-ருஷி, 8) தக்ஷண-ருஷி, 9) கர்த்தம-ருஷி,
10) மனு-ருஷி, 11) விப்ராஜ-ருஷி, 12) விஶ்வகர்மா-ருஷி,
13) மன்யு-ருஷி, 14) வாமதேவ-ருஷி, 15) த்வஷ்டா-ருஷி,
16) விகநஸ-ருஷி, 17) நாராயண-ருஷி, 18) ஶாங்கியாயந-ருஷி,
19) யஜ்ஞ-ருஷி, 20) பார்கவ-ருஷி 21) ஸநந்தன-ருஷி,
22) ஸனத்குமார-ருஷி, 23) அதர்வண-ருஷி, 24) முத்கல-ருஷி,
25) மானஸார-ருஷி.

மேலே சொல்லப்பட்ட ருஷிகள் யஜுர்வேதத்தின் அநேக மந்திரங்களுக்கும் மற்றும் ஸூக்தங்களுக்கும் ருஷிகளாக வருகிறார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் இவற்றிக்கு ஆதாரத்துவமாக வியாஸ முனிவரால் எழுதப்பட்ட கந்தமஹா புராணத்தின் நாகரகாண்டத்திலுள்ள பிரவர காண்டத்திலும் மற்றும் காளஹஸ்தி முனிவரால் எழுதப்பட்ட விஶ்வப்ரஹ்ம புராணத்தில் சுவிரத மஹாராஜா ஸம்வாத காண்டத்திலும் மிக விளக்கமாகச் சொல்லப்பட்டுள்ளது.

***யஜுர்வேதிய ஶாகைகள் :***

1) தைத்திரிய-ஸம்ஹிதை, 2) வாஜஸநேயின-ஸம்ஹிதை.

***யஜுர்வேதிய கல்ப-ஸூத்திரங்கள் :***

1) பௌதாயன-ஸூத்திரம், 2) ஆபஸ்தம்ப-ஸூத்திரம், 3) காத்யாயன-ஸூத்திரம.

***யஜுர்வேதிய உபவேதங்கள் :***

1) ஶில்பகாஶ்யப சாஸ்திரம், 2) விஶ்வகர்மிய சாஸ்திரம், 3) மானஸார சாஸ்திரம.

***ஸ்ரீமாத்வ மத குரு ஸயானா அவர்கள் எழுதிய பாஷியத்தில் விஶ்வகர்மாவைப் பற்றிய விளக்கம்:***

விஶ்வகர்மண: ஜகத்கர்த்து: பரமேஶ்வராத் அதிஸம்வர்த்ததா ஆதித்யேன நிஷ்பன்னோ யோ அயம் ப்ரஹ்மாண்டாபிமானீ சேதன: புமான் ஸோ அயமீஶ்வராம்ஶஸ் தஸ்ய விராட் புருஷஸ்ய ரூபம் சதுர்த்தஶலோக ரூபாவயவஸம்ஸ்தானம் விததன் விஷ்பாதயமாஸ் த்வஷ்டா விஶ்வகர்மா ஜகதீஶ்வர: ஏதி ப்ரவர்த்ததே ஸர்வம் ஜகதக்ரே ஸ்ருஷ்ட்யாதா வாஜானம் ஸர்வத உத்பன்னம்//

ப்ரஹ்மாண்ட ரூபே கர்ப்பே அந்தர் மத்யே ப்ரஜாபதிர் விக்ரஹவான் பூத்வா சரதி/ ஸ ச வாஸ்தவேன ரூபேண ஸத்யம் ஜ்ஞான மனந்தம் ப்ரஹ்மேத்யாதி ஶ்ருத்யா ப்ரதிபாதனா தஜாயமான ஏவ ததா பி மாயிகேன ரூபேண பஹுதா ஸ்தாவரஜங்கமாதி பஹு ப்ரகாரோ விஶேஷேண ஜாயதே/ தஸ்ய ப்ரஜாபதேர்யோனிம் ஜகத்காரண ரூபம் வாஸ்தவம் ஸ்வரூபம் தீரா தைர்யவன்தோ லோகேன த்ருதேந்த்ரியா மஹாத்மானோ ஜானந்தி/ வேதஸோ விதாதார: ஸ்ருஷ்டி கர்த்தாரஸ்தஸ்யைவோபாஸ்ய மரிசயத்ரிப்ரமுகானாம் மஹர்ஷீணாம் பதம் ஜகதுத்பாதகத்வ-லக்ஷண-மிச்சந்தி//

ப்ரஹ்ம வம்சத்தவர்களின் திருமாங்கல்ய ஸூத்திர லக்ஷண விதி
வேத-உபவேத- விஸ்வகர்மீய படி:

ஓம் । நமோ விராட் விச்வகர்ம பரப்ரஹ்மணே ।

[ஸ்ரீ ப்ரஹ்ம வம்ச மாங்கல்ய ஸூத்ர லக்ஷண விதி:]

க) பரமேச்வர
தக்ஷ விதி:



உ) பரமாத்ம
தக்ஷ விதி:



ங) பரப்ரஹ்ம
தக்ஷ விதி:



"[illegible]
[illegible]"
-[illegible]

"[illegible]" – [illegible]

ய: பரமேஸ்வரோ தேவேப்யோ தேவார்த்தமாதபதி ஸர்வத்ர ப்ரகாசதே தேவானாம் தேவத்வஸித்தயே தத்தத் ஹ்ருதயேஷு சைதன்ய ரூபேண ப்ரவிஸ்யா ஆவிர்ப்பவதி/ யச்ச தேவனாம் புரோஹிதோ ப்ருஹஸ்பதிர்பூவ/ யஸ்ச தேவேப்ய: பூர்வொ ஜாத ஹிரண்யகர்ப்ப ரூபேணோத்பன்ன: "ஹிரண்யகர்ப்ப: ஸமவர்த்ததாக்ரே" இதி ச்ருதே: தாத்ருசாய ருசாய ரோசமானாய ஸ்வயம் ப்ரகாசாய ப்ராஹ்மயே பரப்ரஹ்மயே ஸ்வரூபாய ப்ரஹ்மணாவேதேன் ப்ரதி பாத்யாயவா நமோ நமஸ்காரோ அஸ்து//

மேற்படி விராட் விஸ்வகர்ம பரப்ரஹ்மத்தின் ஸ்வரூப லக்ஷணம் சிருஷ்டியின் பெருமைகள் மரீசி, அத்ரி யாதி ஸப்த ரிஷிகளுக்கு பிதாவாகும் நிர்ணயம் மேலும் த்வஷ்டப்ரஹ்மாவிற்கு நியமிக்கப்பட்ட தேவபுரோஹித பட்டம் முதலிய சிறப்புகளை அழகாக க்ரந்தத்தில் விளக்கியுள்ளார். இது பஞ்ச ஸூக்கங்களுக்கும் ஒருசேர விளக்கம் தந்தார்போல் ஆதாரத்துவத்துடன் விளங்குகிறது.

**லிங்கபுராணம்: தநுர் வேத விதியில்,**

"தனுர்தரோ தனுவேதே குணராசிர் குணாகர:, அனந்தத்ருஷிராதோ
தண்டோ தமயிதா தத: அபிவாத்யோ மஹாச்சார்யோ விஸ்வகர்மா விசாரத:"

தனுர்வேதத்தில் சொல்லியபடி தனுசு முதலியவற்றின் நிர்ணயத்தினை க்ஷத்ரியர்களின் குணகர்மங்களுக்குத் தகுந்தாற் போல் தண்டமான விதிகளை மஹா ஆச்சாரியரான விஸ்வகர்மாவினால் நிர்ணயக்கப்பட வேண்டும் மற்றும் அவற்றின் பிரயோகங்களைக் கற்றுத்தர வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது.



